ஓம்.
பரப்ரம்மணே நம:

# முதற்குறள்வாதம்

தெய்வப்புலமை திருவள்ளுவ நாயனார் திருவாய் மலர்ந்தருளிய தமிழ் மறையாக திருக்குறளின் “அகரமுதல வெழுத்தெல்லாமாதி பகவன் முதற்றேஉலகு" என்னும் முதற் செய்யுள் இறைவனுக்கும், இயங்குவன நிற்பனவாகிய உலகத்திற்கும் முதற்காரண காரியத்தன்மை அமையப் பெற்றிக்கின்றதன்றோ?

**யோகசிகோபநிஷத். 4வது அத்யாயம்**

“கேவலம் சித்துத்தானே பிரபஞ்சமாக விளங்குகிறது. பிரபஞ்சத்திற்கு உபாதான காரணம் முதற்காரணம் பிரம்மத்தை தவிர வேறில்லை ---- ஜலமே அலையென்றும் பொங்குதெலென்றும் எப்படி விளங்குகிறதோ மண்ணானது குடமென்ற பெயரில் எப்படி விளங்குகிறதோ நூல் ஆடையென்கிற பெயரினால் எப்படி விளங்குகிறதோ அப்படியே சித்தானது ஜகத்தென்கிற பெயரினால் விளங்குகிறது.”

**சூத சம்ஹிதா சாந்தோக்ய உபநிஷத்**

...மண்ணதிகளினாலாக்கப்பட்ட மண்பாண்டமுன்யாவு
மேற்பெறம்மண்ணதிகளின் வேறன்ற யெப்படி யிருக்கும் அப்படியே (2)

சகத்துக்கொருகாரணமாகித் தயங்குமந்த பிரமங்
கற்பகத்தண்டொனாடன் வேய்ந்து பார்புகழப்படும் போகம் (7)

என்றுமுள்ள சுருதிப்பிரமாணங்களும் அதற் கியைய விருத்தல் பலரும் அறிந்ததொன்றோ?

இஃதிங்ஙனமாக, கடலில் ஒன்றன்பின் ஒன்றாகத்தோன்றி யடங்கிப் போகும் அலைகளைப் போலச் சின்னாள் முன்னர் வேத விரோத மதங்கள் பல தோன்றி, ஒழிந்தவை போக, மிகுந்தனவற்றில் ஒன்றாயுள்ள துவித சைவ மாயாவாத பாஷாண்ட பிரவர்தகர்கள்,

“செய்யா மொழிக்கும் திருவள்ளுவர் மொழிந்த பொய்யா மொழிக்கும் பொருள் ஒன்றே”

என்று சங்கப் புலவரால் புகழ்ந் தேத்தப்பட்டுள்ள திருக்குறளைத் தமது மத நூலாகக் கருதி வாதஞ் செய்ய தலைபடுகின்றார்கள். இது யாது பயனை கருதியோ!

## முதற்குறள்வாதம்

தற்காலத்தில் உலகை மருட்டுந் தொழிழை மேற்கொண்டு, வேதநெறி நிற்பார் போல் வெறி வந்து, வேதத்தை இகழ்வதையே பெரும் பயனாகக் கொண்டிருக்கும் பலரில் ஒருவரான ஸ்ரீ சோமசுந்தர நாயக ரென்பவர் “சித்தாந்த சேகரம்” என்னும் சுவடியில் “அகரமுதல” என்னுந் திருக்குறளைப் பற்றி மத்திமர் மயங்க மனம் போனவாறு எழுதியது “ஆரியன்” என்னும் ஒர் வைதிகரால் “திருவள்ளுவர் முதற்குறள்” என்னும் மகுடத்தின் கீழ் மறுக்கப்பட்டு, அம்மறுப்புப்பல பத்திரிகையிலும் வெளிவந்துலாவிய தோடு புத்தக ரூபமாயும் நிலவுவதும், அதற்கு மறுப் பெழுத வியலாது அந்தச் சோமசுந்தர நாயகர் (தம்பேரில் வந்த பல கண்டனப் புஸ்தகங்களுக்குப் பதிலெழுத முடியாது தலை மறைந்ததுபோல்) இதற்கும் தலை மறைந்ததும் பலரும் அறிந்த விஷயமே யன்றா? இதுவேயுமன்றி, “ஓர் நாகை வாதி” யென்னும் ஒருவர், அச் “சித்தாந்தசேகர” மென்னும் புத்தகத்தை நன்கு பரிசோதித்து, அதில் ஏற்கெனவே அமைந்துள்ள தவறுகளைத் தெற்றெனப் புலப்படும்படி விளக்கி, “சித்தாந்த சேகர விசாரணை” எனத் தலைச்சாத் திட்டு, நாகையில் பிரசுரமாகும் ஸஜ்ஜன பத்திரிகையில் பிரசுரித்து வருவதுடன் சிலவற்றைத் துண்டுப் பத்திரமாகவும் அச்சிட்டுக் கொடுத்து வருவதில் ‘அகரமுதல’ என்னும் திருக்குற ளைப் பற்றி யுள்ள பத்திர மொன்றை “முருக வேள்” என்னும் ஓர் துவித தாந்திரீக மாயா வாதி யான வேத பாஹியர், நாகைநீலலோசனியின் 1897ஹு பிப்ரவரிமீ 15உ பத்திரிகையில் முன்னொடு பின் முரணுமாறு மறுப்பொன்று எழுதி விடுத்தனர். அம் மறுப்புச் சோமசுந்தர நாயகரது கூற்றையே மறுக்க வந்த தென்பதும், ஓர் நாகை வாதியார் எழுதியதை மறுத்தது போல் வந்த தன்றி யுண்மையில் மறுக்க வில்லை யென்பதும் கீழ் நாம் அதை மறுத் தெழுதும் விஷயத்தால் செவ்வனே விளங்கும். அது வருமாறு: -

“துண்டுப் பத்திரிகையின் றலைப்பிலேயே ‘ஸஜ்ஜனப் பத்ரிகா’ வெனும் பிழை யொன்றைச் சுமத்திக் குன்றின்மே லிட்ட விளக்குப்போல உலகிற்குத் தம் தவற்றை விளக்கினார்” என்றார். ‘ஸஜ்ஜன பத்திரிகா’ எனற் பாலது அச்சுத்தப்பால் ‘ஸஜ்ஜனப் பத்திரிகா’ என்றாயதைக் குற்றங் காண வந்தவர், ரகர றகர பேதந் தெரியாது “ஏவ்வா ரெனின்” “இள்ஞாயிரனைய” என்று றகரத்திற்கு தாம் மெழுதிய தங் குற்றத்தைக் காணாமற் போயது என்னையோ? “ஏதிலார் குற்றம்போற் றங் குற்றங் காண்கிற்பிற், றீதுண்டோ மன்னு முயிர்க்கு”

என்றும்,

“பிறன்பழி கூறுவான் றன்பழி யுள்ளும், திறன்றெரிந்து கூறப் படும்”

என்று முள்ள குறளைக் கவனித் திருந்தால், அச்சுத் தப்பைக் காட்டி வெற்றி மாலை சூடக் கருதார்! கருதார்!! “நொண்டிக் குதிரைக்குச் சறுக்கினது சாக்கு” என்றபடி விஷயபல மில்லாத துர்வாதிகள் அச்சுத் தப்பையும் ஓர் வியாஜமாகக் கொள்ளுவார்க ளென்பதற்கு இதுவும் ஓர் சான்றா மென்க.

"வேதத்திற் குட் பட்ட எந் நூலும் எச் சமயமும் தன்னூலாகக் கொள்ளும் தெய்வப் புலமைத் திருவள்ளுவ தேவ ரெழுதிய குறட்பா' என்று வழு வற

வரைந்தார் எந் நூலும் எச் சமயமும் தன்னகத்தே கொள்ளும்' என் றொரு வரிதானும் கசடற வெழுதக் கற்காத இவர் குறட்பாவுக்குப் பொருள் காணும் மதுகை யுடையார் கொல்!" என்றார்.

*ஓர் நாகைவாதி யென்பார் வேதத்திற் குட்பட்ட, எந் நூலின் கருத்தும், எச் சமயக் கருத்தும் தன் னுலின் கருத்தாகவே இருக்கு மன்றி வேறு நூலின் கருத்தாக விரா வென்னுங் கருத் துற வேதத்திற் குட்பட்ட எந் நூலும் எச் சமயமும் தன் னூலாகக் கொள்ளும்' என் றெழுதியதி லுள்ள மேம் பாட்டை யறியும் விரகின்றி, 'எந்நூலும் எச்சமயமும் தன்னகத்தே கொள்ளும் என்றொரு வரிதானும் கசடற எழுதக் கற்காத இவர்' என்று இப் பூர்வபக்ஷியாரெழுதி, வேறு நூலின் கருத்தையும், வேறு சமயத்தின் கருத்தையும் தன்னிடத்திற் கொண்டதே யன்றி, அதனிடத்தில் அக் கருத்துகளை யெடுத்து விடின், அதற்கு (திருக் குறளுக்கு) ஏற்ற மின்றென்னும் கருத் தமைய (எப்பொருளும் யாரு மியல்பினறிவுறச் செப்பிய) திருவள்ளுவரது திருக் குறளை யிகழ்ந்தது மதியாமோ? ஓர் நாகை வாதியார் எழுதிய சொற்ருறொடரின் பொரு ளமைதியையே யறியாத விவர். அவரோடு சாஸ்திர வாதஞ் செய்யப் புறப் படல்,

"கற்றாருரைக்கும் கசடறுநுண்கேள்வி  
பற்றாது தன்னெஞ்சு தைத்தான் - மற்றுமோர்  
தன்போ லொருவன் முகநோகத்தானுமோர்  
புன்கோட்டி கொள்ளுமாங் கீழ்”

எனறுள்ள நாலடிச் செய்யுட்கு இனமா யிருக்கிற தன்றி வேறென்னை

“உருவக வுவமையிற் றிணைசினை முதல்கள்  
பிறழ்தலும் பிறவும் பேணினர் கொளலே"

என்னும், சூத்திரத்தில் “பிறவும் என்பதினால்" “அருளினானெ ....வினையை மற்றொரு வினையாற் கூறுதலும் என்று இல.......கையாற் கொள்ளக் கிடக்கும் வினை யிலக்கண மறியு மாற்ற லின்றி “திரு வள்ளுவ தேவ ரெழுதிய" என்று ஓர் நாகை வாதியார் வரைந்ததில் தவறு காண வந்து, "திருவள்ளுவ தேவர் அருளிய நூல் என்னாது ‘எழுதிய நூல்' என்றால் உய்தி யில்லதோர் குற்றமாம்” என்றார்.

‘அருளிய' என்றால் அது ஈந்த அல்லது எழுதிய வென்று இலக்கணை வகையால் பொருள் கொள்வதற்கு யாதோ ராசங்கையு மின்றி யிருக்க, இப் பூர்வ பக்ஷியார் ‘அருளிய நூல் என்னாது எழுதிய நூல் என்றல் உய்தி யில்லதோர் குற்றமாம்' எனல் சொல் இலக்கண மறியாக் குற்ற மன்றி வேறியாதாம்! 'அருளிய' என்பது ‘சொல்லிய' அல்லது எழுதிய என்றே பொருள் கொள்ள விருக்க; ‘இவர் எழுதிய' என்பது 'உய்தி யில்ல தோர் குற்ற மாம்' எனல் எவ் விலக்கணங் கொண் டோ? ஓர் நாகை வாதியார் 'அருளிய' என்னாது ‘எழுதிய' என்று வரைந்ததற்கு ஏது யாதோ எனின், தெய்வப் புலமைத் திருவள்ளுவ தேவர், தாம் அருளிய (சொல்லிய)

நூலைத் தங் கைப்படவே எழுதி யுலகிற்கு உபகரித்தார் என்னுஞ் சிறப்புத் தோன்ற 'திருவள்ளுவ தேவ ரெழுதிய' என்றா ரென்க

'நான் பிரமம்' என்னுங் கொள்கையுடைய ராதலால், பிரமமாகிய தாம் ஏனைப் பிரமத்தை யுயர்த்திக் கூறத் துணிகின் றிலர் போலும்!" என்றார்.

நான் என்பதற்குப் பொருள் முத்தியில் சீவு சாட்சியா யுள்ள கூடஸ்தன் என்றும், அக் கூடஸ்தனே பிரமம் என்றும் வேதவேதாந்தங்கள் கூறுவதைப் பன்முறை "வேதாந்த சங்கை நிவாரணம்" "அத்வைத துஷண பரிகாரம்" "சித்தாந்திகளும் ஏகான்ம வாதிகளே" சங்கரா சாரியர் அவதார மகிகை" முதலிய நூல்களிலும், பிரம வித்தியா முதலிய பத்திரிகைகளிலும் யுக்தி யநுபவத்தோ டெழுதி யிருப்பதற் கெல்லாம் பதில் விடுக்கும் வலிமை யின்றிப் பதுங்கி யொளிந்த மாயா வாத துவித தாந்திரீக பாஷாண்டிகள் "பழைய கறுப்பனே கறுப்பன்" என்றவாறு அத்வைதிகள் நான் என்பதற்குப் பொருள சீவனைக் கொள்ளுகிறார்க ளென்று கூறல் விவேக முடைமையாமோ? நாகை வாதியார் தெய்வப் புலமைத் திருவள்ளுவர் என்று குறளாகிரியரை யுயர்த்தியே கூறி யிருக்க, இவர், உயர்த்திக் கூறத் துணிகின்றிலர் என்றுரைத்தல்,

"*பொய்படு றொன்றோ புனைபூணுங்கையறியாப்*
*பேதை வினைமேற் கொளின்*"

என்ற செய்யுளுக்கு இலக்கா விருக்கிற தென்க.

சோமசுந்தர நாயகர் "எழுத்தெல்லா மென்றபோது அகரமும் அடங்கி நிற்கவும், அதனை வேறுபோல அகர முதலலெத்து .........றுவதென்னை யெனின்" என்றோ ராசப்பதை கிளப்பி,. (ம....... வந்தார், மன்னனும் வந்தான் என்று, சிறப்பு பற்றி மாந்தரில் ஒருவனான மன்னனை மீண்டும் சொல்வது போன்று; எழுத்தெல்லா மென்ற போது அகரமும் அடங்கி நிற்க அவ் வகரத்தை மீண்டும் ............ சிறப்புப் பற்றி யென்று கூறும் ஊகமின்றி), அதற்குத் தகுந்த விடை யிறுக்காது, "தமிழே யன்றி வடபாஷையினு முதலாதல் பற்றியாம்" என்று போலி விடை யிறுத்ததைப் பற்றி நாகை வாதியார் பிரமத்தி னின்றும் எல்லாம் பிறந்தன என்புழி எல்லாம் என்பதில் பிரமம் அடங்க வில்லை யென்றும், அரசன் முன் னிலையில் யாவரும் வணங்க வேண்டு மெனின் யாவரும் என்பதில் அரசன் அடங்க வில்லை யென்றும் இங்ஙனமே எழுத்தெல்லாம் அகரமுதல என்புழி எழுத்தெல்லா மென்பதில் அகர மடங்க வில்லை யென்றுஞ் சீரிய ஞாயத்தோடு மறுத்ததற்கு யாதும் பதில் பேசாமல் "எழுத்து என்றது இரட்டுற மொழித லென்னும் நயத்தால் இரு பொருள் பட்டு, ஒன்று அகரமுதல் னகர விறுவாய் முப்பதென்றும் மற்றொன்று சினையாகு பெயராய் எழுத்தினா னாக்கப் படும் பாஷை யென்றும் கொள்ளக் கிடத்தலின்......'எழுத்து' என்றதற்குப் பாஷை யென்றும் கண்டு 'தமிழே யன்றி வட பாஷையினு முதலாதல் பற்றி யாம்' என்று அதற்கு விடையும் தாமே எழுதி யுண்மை தெளித்தார்கள்" என்றார். 'எழுத்து என்றது இரட்டுற மொழிதலென்னும் நயத்தால் வடபாஷையினு முதலாதல பற்றியாம்' என்று கூறி விட்டதினால் அகரம் ஏனை யெழுத்துகளுக்கு முதலா யிருக்கிறது

என்று பெறப்பட வில்லயே. அகரம் எனை யெழுத்துகளுக்கு முதலா யிருக்கிற தென்பதற்குத் தகுதியான சமாதான மெழுதத் தெரியாமல் குளறுபடை செய்ததோடு 'எழுத்து' என்பது சினை யாகுபெயராய்ப் பாஷை யென்றுங் கொள்ளப்படும் என்று குளறுபடை செய்வதையும் பாருங்கள்.

சினைப் பெயர் முதலை யுணர்த்தினா லது சினையாகு பெய ரென்றும், காரணப்பெயர் காரியத்திற் கானா லது காரண வாகுபெயரென்றுங் கொண்டு சங்கர நமச்சிவாயப் புலவர் நன்னூல் விருத்தி யுரையில் சினையாகு பெயர்க்கு "மருக்கொழுந்துநட்டான்" வெற்றிலைநட்டான்" என்பனவற்றையும் காரண வாகு பெயர்க்குத் "திருவாசகம்" "திரு வாய் மொழி" என்பனவற்றையும் உதாரணங் காட்டி யிருக்கவும் சேனாவரையர் தொல்காப்பியத்தில் "இலை நட்டுவாழும்' 'பூநட்டு வாழும் எனச் சினைப் பெயர் முதன்மேலும் என்று சினையாகு பெயர்க்கும் 'இக்குடம் பொன்' னெனக் காரணப்பெயர் அதனானியன்ற காரியத்தின் மேலும்". என்று காரண வாகு பெயர்க்கும் உதாரணங் கூறவும், இச் சேனாவரையவா யனுசரித்தே நச்சினார்க் கினி சொல்லவும் இவற்றிற் கெல்லா மாறாகப் பாஷைக்கு முதற் காரணமாக விருக்கும் எழுத்தைக் காரண வாகுபெய ரெனக் கூறாமல், சினை யாகு பெயரெனக் கூறல்; சொல் லிலக்கண உணர்ச்சியின்மையைக் காட்டுகின்றது.

'இவர் மற்றொன்று சினை யாகுபெயராய் எழுத்தினா னாரனெப்படும் பாஷை யென்றுங் கொள்ளக் கிடத்தலின் என்று சொல்லிலேயே 'எழுத்து' காரணம் என்றும், அதனா னாக்கப் படும் பாஷை காரியம் என்றும் கொள்ளக்கிடக்க, எழுத்து 'சினை யாகுபெயராய்ப் பாஷையென்றுங் கொள்ளக்கிடத்தலின்' என்று கூறல் தாமெழுதிய இரண்டொரு வரிகளிலும் தமக்கே இலக்கணங் கூறத் தெரியாதென்றன்றோ விளங்குகின்றது?, இத்தகுதியையுடைய விவர்: பிறர்மாட்டுக் குற்றங் கூறல் என்னாம்! "அகரம் அகரத்திற்கு முதலாதல் யாங்ஙனம்?' எனும் இழுக்குரை நாயகர வர்களால் யாண்டும் வரையப்பட்டில தாகலானும்" என்றார். 'எழுத்தெல்லா மென்ற போது அகரமும் அடங்கி நிற்கவும்' என்றவர் வரைந்ததினாலேயே 'அகரத்திற்கு அக ரம் முதலாதல்' யாங்ஙனம்?" என்னும் வினா அதில் அடங்கி நிற்பதை இப் பூர்வ பட்சியார் உய்த்துணராமற் போயதும், உய்த் துணர்ந்து கூறியவரது கூற்றைக் கூர்ந்தறியாமற் போயதும் நுண்ணுணர் வின்மையே யாம். நாயகர்க்கு 'அகரத்திற்கு அகரம் முத லாதல் யாங்ஙனம்? என்னும் வினாத் தோன்றாவிடன் எழுத்தெல் லாமென்ற போது அகரமுமடங்கி நிற்கவும்; அதனை வேறுபோல 'அகரமுதல வென்று கூறுவ தென்னை யெனின்' என்று வரைவாரா? வரைந்ததினால் சோ. நாயகர்க்கு 'அகரத்திற்கு அகரம் முதலாதல் யாங்ஙனம்?' என்னும் வினாத் தோன்றி யது திண்ணத்தினுந் திண்ண மென்க! வெள்ளரிப் பழத்திற்குப் பூண் கட்டுவதுபோலச் சேர். நாயகர் எழுதிய தொடருக்கு இவர் பொருத்த மமைக்க முயல்வது,

*"குரங்கு நின்று கூத்தாடிய கோலத்தைக் கண்டே*
*அரங்க முன்னி னாய் பாடிக் கொண்டாடிய வதுபோல்*
*கரங்கள் நீட்டியே பேசிய கசடரைக் கண்டு*
*சிரங்க ளாட்டியே மெச்சிடு மறிவிலார் செய்கை."*

என்னுஞ் செய்யுளுக் கிலக்காக வன்றோ விருக்கின்றது? "ஆசிரியர் பரிமேலழ கரும் அவர் கருத்தறிந்து தமிழ் எழுத்திற்கே யன்றி வடவெழுத்திற்கு முதலாதல் நோக்கி எழுத்தெல்லா மென்றார்" என்றார். எழுத்தினா னாக்கப்படும் பாஷையை எழுத்து எனல் கருவி யாகு பெயரா லெனக் கூறத் தெரியாது, சினை யாகு பெயர் எனக் குளறுபடை செய்த இவர்க்கு 'வட வெழுத்திற்கும் அகரம் முத லாதலை யுடைத்து' என்று கூறிய பரிமேலழகர் துணையாய தெங்ஙனோ!

எப்பாஷைக்கும் தாய் ஸ்தானமாயுள்ள தேவ பாஷையான சமஸ்கிருதத்தில் 'அகரம் முத லாதலை யுடைத்து' என்ற ........ னே ஏனைப் பாஷையிலுள்ள எழுத்துக்க ளுக்கும் "அகரம் முதலாதலை ..... டைத்து' என்னும் பொருள் உயத்துனர்வைப்பாகத் தோன்றுமாறு பரிமேலழகர் 'அகரம் வடவெழுத்திற்கும் முதலாதல் நோக்கி' என்றார். இவரோ பாஷைக்கு அகரம் முதல் என்கிறார். அகரம் ....முதல் என்பது சிறப்போ? எழுத்தினா லாக்கப் படும் பாஷைக்கு முதல் என்பது சிறப்போ? புத்திமான்களே, சிறிது கூர்ந்து நோக்குங்கள்! அகரம் எழுத்திற்கு முதலென்றபோதே எழுத்தாலாக் கப்படும் பாஷைக்கும் முதலாதல் சொல்லாமலே விளங்க, இவர் எழுத்தினா லாக்கப்படும் பாஷைக்கும் அகரம் முதல் என்று மிகை படக் கூறல் பொருத்த முடையதாமோ? இவர், தம்முடைய குளறுபடையை யாசிரியர் பரிமேலழகர்மேலே ற்றப் பார்ப்பது கொடுமையினுங் கொடுமை! மிகக் கொடுமை!!

"ஆங்கிலேய இலக்கண வித்துவான் டாக்டர் பெயின் என்பவர் தாமியற்றிய அரிய இலக்கண நூலில், நம்மா லியன்றவரையில் நமது பாஷை யெழுத்துக்களின் முன்னைய வியல்பை நாம் ஆராயப் புகுவோ மாயின் நாம் மூன்று முதன்மை யுயிர்களைக் காண்பேம். அவற்றி னின்றும் பல திரிவாய்ப் பல வெழுத்துக ளுண்டா யின என்று கூறியதாய்க் கூறிப் பின்பார் "அகரத்தி னின்றும் பிறவெழுத்துக்கள் பிறந்தவாறு போலப் பிரமத்தி னின்றுட்டல குயிர் முதலியனவும் தோன்றுமென்று கோடுமெனின்: - அறியாது கடாயினாய், அ வென்னும் ஒலியினின்றும் இ, உ முதலிய பிறந்ததில்லை; அவையெல்லாம் இதழ், நா, பல், அணம் முதலியவற்றின் தொழிலால் வெவ்வேறு வகையவாயின; வாயைத் திறந்தே எனைய வெழுத்துக்க ளும் ஒலிக்க வேண்டுதலான், திறந்த மாத்திரையின் உதிக்கும் அகரத்தை நிமித்தகாரணமாக முதல் வைத்ததன்றி, முதற்காரணமாக முதல் வைக்கப்பட்ட தல்ல" என்றார். டாக்டர் பெயின் என்பவர் மூன்று முதன்மை யுயிர்களைக் காண்போ மென்றும், அவற்றினின்றும் பலதிரிவாய்ப் பலவெழுத்துகளுண்டாயின என்றும் கூறி, மூன்று உயிரெழுத்திற்கும் மற்ற வெழுத்துகளுக்கும் காரண காரியத் தன்மை சாதித்தார். அவர் சாதித்தது 'திரிவாய்' என்பதினாலும், 'உண்டாயின்' என்பதினாலும் நன்கு புலப்பட, அகரம் ஏனை யெழுத்துகளுக்கு நிமித்த காரண மென்று கூறும் முருகவேள் என்னும் இப் பூர்வ பட்சியார் மூன்றுயிரெழுத்திற்கும் ஏனைய வெழுத் துகளுக்கும் முதற் காரண காரியசம்பந்தங் கூறும் டாக்டர் பெயின் என்பவரைத் துணையாகக் கோடல், "அடியுண்டோடுபோன், ஆளறியாது அடிப்போனையே துணைகொண்டதற்கு இனமாயிருக்கிற தென்க. சித்தாந்தசேகரம் 14 ம் பக்கத்தில் "அகரவுயிரொன்றே பலபட விரிந்ததல்லது அவைகள் வேறல்லாமையால்" என்றும், 15 மீ (பக்கத்தில் "இதுகாறுங் காட்டி ..............யங்களால் அகரமும் மற்றை யுயிர்களும்

ஒன்றென்றும், ........... மெய்களும் வேறென்றும்" என்று கூறிய சோமசுந்தர நாயகரது கூற்றை .....க்குமாறு 'அ வென்னும் ஒலியினின்றும் இ, உ முதலிய பிறந்ததில்லை' என்று இப்பூர்வ பட்சியார் மறுப்பது அவர்மேற் கொண்ட வயிரத்தை நன்கு விளக்க வாக்கும்! இவர் அவருக்குத் துணையாய் வந்தமை உண்மையாயின், அவர் அகரத்தினின்று ஏனைய வுயிர்கள் பிறந்தன என்று கூறுவதை மறுத்து, 'அ வென்னும் ஒலியி னின்று இ, உ முதலிய பிறந்ததில்லை' என்று கூறுவரோ? கூறினமையான் அவர் கூற்றை மறுக்கவே இவர் வெளிவந்தா ரென்பதற்கு ஆசங்கை யென்னை? சோம சுந்தர நாயகர் உட்பகையா புள்ள முருகவேளைத் துணையாகக் கொண்டதினா லன்றோ,

*"சீரிடங்காணி னெறிதற்குப் பட்டடை*
*நேரா நிரந்தவர் நட்பு"*

என்னும் குறளுக் கிலக் காக அம் முருகவேளாலேயே சமயத்தில் மறுக்கப் பட்டர் பாவம்!. இனிமே லாகிலும் இப்படிப்பட்டவர்களது நேசத்தை அவர் விட்டிருப்பாராக. உந்தியிற் றோன்றிப் புறத்தே புலப்பட்டு ஒலிக்கும் ஒலியில் அகர வொலி முன்னாகவும், அதிற் சிறிது வேறுபட்ட இகர வொலி பின்னாகவும், அவ்விர ண்டினும் சிறிது வேறுபட்ட உகர வொலி அதன் பின்னாகவும் முறையே யுண்டாதல் அநுபவ சித்தமா யிருக்க, 'இவர் அ வென்னும் ஒலியி னின்றும் இ, உ முதலிய பிறந்ததில்லை' யென்பது நூலினின்றும் ஆடை வரவில்லை யென்பதற்கு இனமாய ன்றோ விருக்கின்றது? அ வென்னும் ஒலியி னின்றும் இ, உ முதலிய பிறந்தன வென்பது: "குறிலினது விகாரமே நெடி லாதலால் குறில் முன்னிற்றலின் சிறப்பி னென்றும், நெடில் இனமாய்ப் பின் னிற்றலின் இனத்தி னென்றும்; நாத மாத்திரை யாய் எல்லா வெழுத்திற்கும் காரணமாய் முன் னிற்றலின் அம் முத லென்றும்" என்றுள்ள நன்னூல் விருத்தி யுரைவினாலும், "ஆதனநாதியும் உதான னாதியுமா, நாதம் உர்ங் கண்டந் தலை யிஉமுற்றுப் பல் லிதழ் நா மூக்கண மைந் தொழிலா, லெல்லா வெழுத்தும் பிறக்கு மென்ப" என் றுள்ள பேரசந்தியச் சூத்திரத்தினாலும், "மொழிக் காரணமா நாத காரிய வொலி, எழுத்து" என்றுள்ள இலக்கண விளக்கச் சூத்திரத்தினாலும், "உந்தி முதலா முந்தவளி தோன்றி" என்றத் தொடக்கத் தனவா கிய தொல்காப்பியச் சூத்திரத்தினாலும், அதனுரையான நச்சினார்க் கினியத்தாலும், இளம் பூரனைத்தாலும் பெறப்படுதலின், அவையிற்றிற் கெல்லா மாறாக அ வென்னும் ஒலியி னின்று. இ, உ முதலிய பிறந்த தில்லை' என்னும் முருகவேள் கூற்றுப் போலிக் கூற்றென்று விடுக்க. அ வென்னும் ஒலியி னின்று இகர முதல னகர வீறாயுள்ள வெழுத்துகள் யாவும் பிறந்தன வென்று சாதித்தோ மாகலின், இது கொண்டே பிரமத்தி னின்றும் ......... யாவும் பிறந்தன வென்று கொண்டாம். இது விஷயமாக மு............ ளென்னும் புஸ்தகத்தில் விரிவாய்ப் பேசப்பட்டி.ருக்கின் றமையன, அது பற்றி யீண்டு விரிக்காது விட்டா மென்க.

"அ வென்னும் ஒலியினின்று இ, உ. முதலிய பிறந்ததில்லை; அவை யெல்லாம் இதழ், நா, பல், அணம் முதலியவற்றின் தொழிலால் வெவ்வேறு வகை யாயின" என்றவர் 'வெவ்வேறு வகையாயின' இவை யென்று விளக்காமையின் இ, உ முதலியவாக வெவ்வேறு வகையாயின் அ என்னும் ஒலியே யென்று மேற்

கூறிய பிரமாணங்களுக் கியையப் பெற்றாம். இ, உ முதலிய இதழ், நா, பல், அணம் முதலிய தொழிலால் ஆகின்றமையின், இவர் 'அவை யெல்லாம்' என்பது எவை? 'அவை யெல்லாம் என்பது இ, உ முதலிய வெனின், இதழ், நா' முதலிய பல் வகைத் தொழிலால் இ, உ முதலியவாக ஆதற்கு முன் நாத மாத்திரையான அகரமாக வன்றி வேறு வகையாய்க் கொள்ளுவதற்கு ஏது சிறிது மின்றே. இன்றாக 'அ என்னும் ஒலியி னின்றும் இ, உ முதலிய பிறந்த தில்லை' என்று இவர் கூறுதல் இவர்க்கே கூற்றாகின்றது. இப் பூர்வ பக்ஷியார் 'அ வென்னும் ஒலியில் இ, உ முதலிய பிறந்த தில்லை' என்று கூறினாலும் அவர் கூற்றில் அ என்னும் ஒலியி னின்றே இ, உ முதலிய பிறந்தன வென்று பொதிந்து கிடந்தலுக்கு யாது செய்வது?

'திறந்த மாத்திரையின் உதிக்கும் அகரத்தை நிமித்த காரணமாக முதல் வைத்த தன்றி, முதற் காரணமாக முதல் வைக்கப்பட்ட தல்ல' என்பதி னாபாசத் தையும் விளக்குவாம்.

திறந்த மாத்திரையி னுதிக்கும் அகரம் பல்வகைத் தொழிலை நிமித்தமாகப் பெற்று இதர உகர முதலிவன் வாகக் காரியப் படுதல் "எல்லாவெழுத்தும் வெளிப்படக்கிடந்து" என்றத்தொடக்கத்தவாய் தொல் காப்பியப் புறனடைச் சூத்திரத்தினாலும், "எடுத்தல் படுத்தல்" என்றத் தொடக்கத்தவாய நன்னூல் புறனடைச் சூத்திரத்தினாலும், ஏனைய சூத்திரங்களாலும் கொள்ளக் கிடக்க, இவர் தொழிலை நிழித்தமென்றுகூறாமல் இகர உகர முதலியவற்றிற்கு முதற்காரணமான அகார்தை நிமித்தகாரண்மெனர் கூறலென்னோ! நிமித்தகாரணனாகிய குயவன் காரியமாதிய குடத்தில் வியாதியாமலிருப்பதுபோல, நாதமாத்திரையான அகரம் எனையெழுத்துகளில் வியாபியாம லிருந்ததாலன்றோ அது பொருந்தும்? தன் காரியமாகிய குடத்தில் மண் வியாபிப்பது போன்று, நாத மாத்திரையான அகரம், தன் காரியமான எழுத்துகளில் வியாபித் திருத்தலானும், மண்ணை யெடுத்து விட்டால் குடமென்பதற்குப் பொரு ளில்லாமைபோல, நாதமாத்திரையான அகரத்தை நீக்கி விடின், ஏனைய வெழுத்துகள் அபாவமாய்ப் போகின்றமை யானும் நாத மாத்திரை யான அகரமே ஏனைய வெழுத்துகளுக்கு முதற் காரண மென்பது பசுமரத்தாணியா மென்க.

"முதற்காரணமாயின் அவ்வகரத்தினின்று மேனை யெழுத்துகள் பிறத்தல் வேண்டுதலி னென்க. அகரத்தொடு நிகழும் அங்காப் பின்றேல், ஏனைய எழுத்துக்க ளொலிக்கப்படா வாறுபோல கடவு ளின்றேல் உலகுயிரு மில்லையாம். என்றால் மற்றை யெழுத்துகள் நிலை பெறுதற்கு ஒரு தலையாக இன்றியமையாதா யுள்ளது அகரம் போல் உல குயிர் நிலை பெறுதற்கு இன்றியமையாதாயுள்ள அரிய பொருள் கடவுள் என்பதாம்"

என்றார்.

அகரம் ஏனை யெழுத்துகளுக்கு நிமித்த காரண மென்று இப்பூர்வபட்சியார் கூறியது நிலைபெறாது, மேற்காட்டி யுள்ள நியாய முகத்தால் முதற்காரணமென்று நிலைபெற்றமையின், அவ்வகரத்தை யுவமானமாகக் கொண்ட கடவுளும்

"*அருளுருவாம் பரமசிவ னனந்தசத்திக்காதாரமாக வமர்ந்திருப்பதாலே*
*சருவசக்காரணமா மவ்வீசற்குச்சமமேனு மல்லதவற் கதிகமேனும்*
*ஒருபொருளு மிலையதனானன்னோன்றானேயோதுமுபாதானநிமித்தங்களாவன்*
*கருதியவிவ்வீசற்குமேலாய் வேறோர்காரணமு மொருக்காது மெங்குமில்லை*"

என்னும் சிவரகசிய ரிபுகீதைச் செய்யுளின்படி சரஜாகமா யுள்ள உலகிற்கு முதற் காரணமா யிருக்கிறார் என்பது பெற்றாம். நிற்க; கடவுளைக் கேவலம் நிமித்த காரணராகச் சொல்லி, அவரால் சிருட்டிக்கப்பட்ட வுலகில் அக்கடவுள் வியாபிக்கி ன்றா ரென்று சொல்லும் பக்ஷத்தில் கேவலம் நிமித்தகாரணனான குயவனுங் குடத் தில் வியாபித் திருக்க வேண்டும். அவ்வா றின்மையால் இவர் கூறும் கடவுள் உலகில் வியாபித்தலில்லை யென்பது பெற்றாம். ஆகவே, இவரது வேத விரோத கேவலம் நமித்த காரணக் கடவுள் அவ்வியாபகராயும் கண்டராயும் ஆகின்ற தோஷத்தைப் பெறுகின்றாரென்க.

நிமித்த காரணராராயிருந்து கடவுள், உல குயிர்களுக்கு இன்றியமையா திருக்கின்றார் என்கிறார். காரியமாதற்கு முதற்காரணமும் இன்றி யமையாததுதால், நிமித்தகாரணமும் இன்றி யமையாதது தான். காரியமான குடமாதற்கு முதற் காரணமான .............ன்றி யமையாதது தான், நிமித்தகாரணனான குரவனும் இன்றிமையாதவன்றான். இவர் குயவனிடத்தில் கடவுளை வைத்து அக்கடவுளை இன்றியமையாதவ ரென்று கூறி, இவ்வுவமேய துக் கியைந்தபடி இ, உ இவற்றினுக்கு அ நிமிந்த மென்கிறார். அப்படியானால் இ, உ இவைகட்கு முதற் காரணம் யாது? நாதத்தைக் கூறின், அது கூடாது; ஏனெனின் இகர உகரங்கள் அகரத்தின் காரியமென்று முன்பே தீர்மானித் திருக்கின்றமையானும், முதல் வாதி யான சோம சுந்தர நாயகரும மற்ற வுயிர்களுக்கு அகரம் முதற் காரணமென அச் சித்தாந்த சேகரத்திலேயே யொப்புக்கொண் டிருக்கின் றமையானு மென்க. ஆகை யால் இகர உகர மாதிகட்கு அகரம் நிமித்த காரணமாகாது. இகர உகர மாதிகட்குக் காரணமும், நாதத்தின் காரியமுமான அகரம் அவ் இகர உகர மாதிகட்கு நிமித்த காரண மாதல் கூடாது. ஆடையின் காரணமாயும் பஞ்சின் காரியமாயுமுள்ள நூல் அவ்வாடைக்கு நிமித்த காரண மாகாமைபோ லென்க. இதர உகர ங்கட்கு அகரத்தை நிமித்த காரணமாய் வைத்து உவமானங் காட்டி, இவ் வுவமானத்துக் கியைந் தபடி உலகுக்குக் கடவுளை நிமித்த மென்று சொல்லுகின்றா ரன்றா? அப்படியானால் இகர உகரங்கட்குக் காரணமாயும் நாதத்திற்குக் காரிய மாயும் அகரம் இருப்பது போலக் கடவுளும் உலகுக்குக் காரணமாயும், மாயைக்குக் காரியமாயு மிருத்தல் வேண்டும். இருக்கின் மாயை சடமாகலின் கடவுளும் சடமாயும், காரண காரியம் அபின்ன மாகலின் மாயையும் கடவுளும் அபின்னமாயு மிருத்தல் வேண்டும். கடவுள் சித்தே யென்னின் கடவுளின் காரியமான உலகும் சித்தா யிருத்தல் வேண்டும். இந்த உவமேயப்படி மண்ணின் காரியமாயும் குடத்தின் காரணமாயும் குயவனிருத்தல் வேண்டும்.

உலகிற்குக் கடவுளை முதற் காரணஞ் சொல்வது இவர்க்கு விரோதமாயினுக் அவ்வாறு சொல்லுமாறு வலிய வந்து அகப்பட்டுக்கொண்டார். இவ் வளவு தோஷங்கள் நிகழ்வதால் இ உ க்களுக்கு அகரத்தை நிமித்தகாரணகாயும், அதுபோல உலகுயிர்களுக்குக் கடவுளைக் கேவலம் நிமித்த காரணதாயும் கூறுவது பொருத்த

மின்றென் றறிக.

'கடவுளின்றேல் உலகுயி ரில்லையாம்' என்ற வாக்கியத்தைப் பின்னும் ஆராய்வாம். நிமித்த காரண னான குயவ னில்லாவிடில் காரியமானகு மில்லாமை போல நிமித்த காரணனான கடவுளில்லா விடில் காரியமான உலகில்லர் விடினும் உயிரு மில்லாமற் போதல் யாங்ஙனம்? உயிர் காரிய மென்று சொல்வாரேல், அதற்குக் காரமனம் யாது? மாயையால் முதற் காரணத்தைக் கொண்டு கடவுள் உலகைச் சிருட்டிப்பதுபோல எந்த முதற் காரணத்தைக் கொண்டு உயிரைச் சிருட்டித்தார்? மாயையை யென்னின் அப்போது உயிர் காரியமாய் முன்னின்மை யாய்ப் போய், உயிர் அநாதி யென்னும் சொல் எடுபட்டுப் போம். அன்றிச் சடமான மாயையி னின்றும் சித்தாகிய உயிர் தோன்றுவது கூடாது. சித்தினின்றும் சடமும், சடத்தினின்றும் சித்தும் தோன்ற வென்பது பூர்வ பக்ஷிகளுடைய ஆசங்கை.

"பிறவெழுத்துக்கள் பிறத்தற்கு வினைமுதலாய் நின்ற அகரம் இகரத்தோடு கூடி எகரத்தையும், உகரத்தோடு கூடி ஒகரத்தையும், இகரத்தோடும் ய வொடும் கூடி ஐகாரத்தையும், உகரத்தொடும் வ வொடுங்கூடி ஔகாரத்தையும் இயக்கி ஏனை மெய்களோடும் புணர்ந்து அவற்றையு மியக்கித் தன்னாலாய பயன் விளைத்தாற் போலக் கடவுளும் உல குயிரிற் கலந்து அவற்றை யியக்கிப் பெறும் பயன் பயந்தவாறுணர்க"

என்றார்.

எகரம், ஒகரம், ஐகாரம், ஔகாரம் என்னும் இந்நான்கினையும் நன்னூல் விருத்தி யுரையில் சங்கர நமச்சிவாயப் புலவர் "எ, ஒ, ஐ, ஔ என்னும் நான்கினையும் வடநூலார் சந்தியக்கரம் என்பர், கையடனார். 'நரமடங்கல்போ' லென்றுவமையுங் கூறினர்" என்றும், சுப்பிரமணிய தீக்ஷிதர் பிரயோக விவேகத்தில்" இனிச் சந்தி யக்கரமாவது 'அகர விகரம் எகார மாகும்' 'அகர வுகர மொகர மாகும்' இதர வுகர மென்னு மிவற்றோ டகாரம் ஐ ஔவாகலு முரித்தே' இவ்வுரைச் சூத்திரங்களால் ஈரெழுத்தாகிய சந்தியக்ககமென்றும் ஒரெழுத்தாதிய மகாக்கரம் என்று மறிக"

என்றும்,

உரையாசிரியயை, நசரினார்க்கினியரும் தொல்காப்பியம் மொழி மரபின்கண் நிரலே "அகர இகர மைகார மாகும்" "அகர வுகர மௌகாரமாகும்" என்னுஞ் சூத்திரங்களுக்குப் பொருள் கூறுமிடத்து, "போலி யெழுத்தாமா றுணரற்று, அகரமு மிகரமுங் கூடச் சொல்ல ஐகாரம் போல வாகும், ஆது கொள்ள்றக" என்றும், "அகரமும் உகரமுங் கூட்டிச் சொல்ல ஔகாரம் போல இணைக்கும், அது கொள்ளற்க" என்றும் கூறி யுள்ளவற்தற் கெல்லாம் மாறாக எ, ஒ, ஐ, ஔ என்பன தனித்தனி யிருக்க, அகரம் வேறு எழுத்துகளோடு கூடி அவற்றை யியக்குவதாக இவர் கண்ட இலக்கணம் எவ்வுலகத்தில் லுள்ளதோ? அது இவர்க்குமாத்திரம் தெரியும் போலும்! எ, ஒ, ஐ, ஔ என்னும் நான்கினையும் சந்தியக்கரம் என்று

சிலரும், ஐ, ஔ என்னும் இரண்டினையும் போலி யெழுத்தென்று சிலரும் புகன்றதற்கு வேறுபட்டுப் பேசுமிவர்: எ, ஓ, ஐ, ஔ என்னும் எழுத்துகள் தனித்தனி யிருக்க அவற்றை அகரம்: இகர முதலிய எழுத்துகளோடு கூடி யியக்குவதற்கு இலக்கியங் காட்டுவாராக.

"பரமார்த்தத்தில் தான் பொய்யெனத் தள்ளவிருக்கும் தேவர் குறளுக்குப் பொருந்தாவுரை கூறவந்தது பொய்ப்பொருட்கு யாது கற்பிக்கினும் தவறில்லை யெனும் தங்கொள்கையைத்தழுவிப்போலும்"

என்றார்.

பாரமார்த்தத்தில் சித் கன மாகிய பிரமத்தைத் தவிர வேனைய வெல்லாம் மிததை யென்பதற்குக் காரணம் பல புத்தகங்களிலும் பல பத்திரிகைகளிலும் அத்வைதிகள் எழுதி யிருப்பதற்கு எதிர் மாற்றம் பேசாதொழிந்த வேதவிரோத மாயாவாதிகள்,

**சர்வசாரோபநிஷத் 10.**

"பிரமம் எப்படிப்பட்டது?

எவ்வித வபாதியுமற்றது, நிர்விசேஷ சின்ழாத்திரம், சத்தானது; இரண்டாவதற்றது, ஆநந்தமானது, மாயையற்றது எதுவோ அதுதான் பிரமம்.......... சுத்தம் பாரமார்த்திகம்"

என்றும்,

**சூதசங்கிதை பஞ்சாக்கர மந்திரம்.**

*இல்லையிருப்பதுபொய்மெய்விளக்கமஃதின்மையெனவிவைமுன்னாகச்*
*சொல்லும்விவகாரமெலாமாயையினாற்றானின்சொரூபனென்றும்*
*வல்லசிவன்கற்பித்தமாயாகரரியப்பவஞ்சமருவதோற்றம்*
*செல்லலுறுவிவகாரதிசையினன்றிப்பரமார்த்ததிசையினில்லை.* (13)

என்றும்,
**விஷ்ணுபுராணம் நான்காம் அத்தியாயம்.**

"நீ யொருவனே பாரமார்த்த மாகின்றாய்."

என்று முள்ள வேதபுராணப் பிரமாணங்களுக்கு விரோதமாகப் பரமார்த்த நிலைமையை யிகழ்வது அவைதிக மதத் தடிப்பே யாம்.. திருக்குறளில்,

"*பொருளல்லவற்றைப் பொருளென் றுணரும்*

*மருளானா மாணாப் பிறப்பு"*

என்றும்,

"*எப்பொரு ளெத்தன்மைத் தாயினும் அப்பொருள்*
*மெய்ப்பொருள் காண்ப தறிவு*"

என்று முள்ள பிரமாணங்களை யிவர் கேட்டேனு மிருந்தால் பரமார்த்த நிலைமையைப் பரிகசியார் பரிகசியார்!! தாம் பேசப்புகுந்த நூலைப் படியாமலே பேசும் படிப்பிலிகள் கூற்று அந்நூலோடு மாறுபடு மென்பதற்குச் சான்று இம்முருக வேள் கூற்றே சாலுமா மென்க.

'அகரமுதல' வென்னும் குறளைப்பற்றி யிதுகாறும் எழுதிவந்த விஷயத்தி னால் ஓர் நாகை வாதியார் எழுதிய வுரை பொருத்தமாயும்; பொய்ப் பொரு ளிது, மெய்ப் பொரு ளிது என்று பதார்த்த விசாரஞ் செய்யாது அவ்விரண்டையும் மெய்ப் பொரு ளெனக் கருதும் பூர்வ பட்சியார் கூறிய வுரை ஆபாசத்தினு மாபாச மாயும் முடிந்தமையின், முருகவேள் எழுதிய தவறுரை தவறாயே முடிந்ததென்க.

தொடர்மொழி பல பொருள் படுதலை யேதுவாகக் கொண்டு "ஓர் நாகைவாதி" என்னும் தொடர் மொழியைத் தம்மனம் போனவாறு பல பொருட்படுத்தி "நாகை வாதி யென்பது நாகையை வாதிப்பவர், நாகைக்கு வாதி" என்றத் தொடக்கத்தன வற்றை யெழுதிக்களித்த இப் பூர்வ பட்சியார், 'நாகைவாதி' என்பதை நாகையிலிரு க்கும் வாசி யென ஏழாம் வேற்றுமை யுருபும் பொருளும் உடன் றொக்க தொகை யாக இடரின்றித் தெளிவுறப் பொருள் கொள்ளத் தெரியாததுடன் யாருக்கு வாதி என்னும் வினாவுக்கு விஷயத்தொடர்பால் சித்தாந்த சேகர நூலுடையார்க் கென்னும் விடையினையும்,

"*பொன்பெறும் கற்றான் புகழ்பெறும் நற்கவி*
*யென்பெறும் வாதியிசைபெறும்*"

என்னுஞ் சங்கச்செய்யுளின்படி வாதியிசை (புகழ்) பெறுவானென்பதையும் அறியும் விரமின்றிப் போனார்பாவம்! அறியும் விரகிருந்தால் இவ்வா றெழுதி யலமருவரோ!

"ஒருவன் வரம் பிகந்து போய் முன்னர் வழக்குத் தொடுத்தல் கூடாதென்னும் நீதியை 'வாதுமுற்கூறேல்' என்பதாய் ஔவையார் உரைத்தா ராதவின், அதைக் கருதாது நண்பர் இழுக்கு வழக்குத் தொடுத்ததே இவரது துடுக்குத் தன்மையைக் குறிப்பதாயிற்று"

என்றார்.

சாஸ்திர வரம் பிகந்து பித்தன் கூற்றுக்குப்பின்னிடாது நின்று கிறிஸ்தவர், பௌத்தர், பரஸ்திகர், பிரம சமாஜிகள் முதலியவர் போன்று வருணாசிரம தரும்

மின்றென்றும் வேதம் வியபிசார நூலென்றும், பசு நூலென்றும் உலக நூலென்றும், மோக நூலென்றும், பந்த நூலென்றும் இன்னும் இவ்வாறு பலவுமாக சொல்லி, வேதாதங்கட்கு மாறான நடவடிக்கையுள்ள சோமசுந்தர நாயகர் எழுதியதையும் சொல்வதையும் படித்த கேட்ட மந்திமர்கள் மயங்கா வண்ணம் வைதிகராகிய ஓர் நாகை வாதியார், அதை மறுத்துவரல் துடுக்குத்தன்மையாவ தெங்கனமோ! சோம. நாயகர் சாஸ்திர மரியாதையை யறியாமலும், பலாபலம் தெரியாமலும் பல வேதாந்திகளோடு முன்னர் வழக்குத் தொடுத்துப் பின்னர்த் தோல்வி யுற்றுத் தலை மறைந்தொழுகுவதைப் பலரறியுமாறு வெளிப்படுத்துவான் வேண்டி அவர்பேயி லுள்ள குற்றங்களை யெல்லாம் இப்பூர்வ பக்ஷியார் நாகை வாதியார் பேரில் ஆரோபிக்கின்றார் போலும்! இதனால் சோ. நாயகர் பேரி லிவர்க் குள்ள அழுக்காறு நன்கு புலப்படுகின்றது. இன்றேல் அவர் செய்கையை யிவர் பேரி லாரோபிப்பதற்கு ஏது என்னை? சோ. நாய்கர் அத்வைதிகளை முன்னர்த் தூஷித்திருத்தலால் அவரே 'வாதுமுற்கூறேல்' என்னும் ஔவை வாக்கியத்தைக் கடந்தாரென்பதற்கு யாது மாசங்கை யின்றென்க. முன்னர் வாது கூறிய அவரோடு பின்னர் ஓர் நாகை வாதியார் வாது கூறல் குற்ற மாகாதே. ஔவையார் முன்னர் வாதுகூறேல் என்றுபொருள்பட' வாதுமுற் கூறேல்" எனக் கூறினாரே யன்றிப் பின்னர்க் கூற வேண்டா மென்று கூறவில்லையே. சமயாசாரியர்கள் பின்னர் வாது கூறாவிடில் சமயங்கள் நிலைத்திருக்குமோ? இதைச் சற்றுக் கூர்ந்து நோக்குக.

'நாம் அவர் வரைந்து வெளியிட்ட விஷயங்களைக் கொண்டு, அவரை மாயாவாதி யென்றும், கையொப்பத்தைக் கொண்டு சூனியவாதி யென்று மறிந்தாம்"

என்றார்.

ஓர்நாகை வாதியார் எழுதிய விஷயம் இவ்விவாதத்தினால் யுக்தி யனுபவ முள்ளதாயும் சுருதி சம்மத மாயும் மாயையைத் தும்சஞ் செய்வதாயும் இருத்தலின், அதைமறுக்க எழுந்த முருகவேளே மாயாவாதியாயும் * "மாயாவாத சைவசண்ட மாருதம்" 174 வது 175 வது பக்கங்களிற் காட்டியவாறு நாஸ்திக சூனியவாதியாயும் ஆகின்றாரென்றறிக.

"நாகைவாதி .................. நா கை வா தீயராயினார்"

என்று முடிவில் கூறினார்.

நாகைவாதி யென்பதி னீற்றிலுள்ள இதரம் ஈகாரமர்தற்கு ஈண்டு விதி யேது மின்றியிருக்க, வீனே இலக்கண விரோதமாக இகரத்தை ஈகாரமாக்கி யிகழ்வது நன்றாகாது! அக்கிரமத்துக்கு முற்பட்டுவரும் இத்தகைய முருகவேளது நாவும் கையும் வாயும் வைதிக மதத்தை யிகழும் பாவ வலியான் தீமை யுற் றிருக்கின்ற மையின், அத்தகைய யாவும் கையும் வாயும் தீமையுறுதலின்றி, நன்மை யுறுமாறு எல்லாம் வல்ல இறைவனைப் பிரார்த்திக்கின்றனம். சுபம்..

* (1) “சங்கராசாரியர் அவதாரமகிமை” யில் 7-வது 8-வது பக்கங்களில் பேசிய காரணகாரிய வாதத்தில் இவரது கடவுள் சடமாயும், அசத்தாயு முடிவதால் இவரது மதம் நாஸ்தி மதமாம்.

(2) “அத்வைத தூஷன பரிகார” த்தில் 20-வது பக்கத்தில் மறுத்த மறுப்பின் படி நீர் ஸ்தானத்தில் உயிரையும், நிழல் ஸ்தானத்தில் சிவனையும் இவரது சிவஞான சுவாமியார் சொல்வதால் சிவன் பொய்யாய் அது காரணமாக இவரது மதம் நாஸ்திக மதமாம்.

(3) ஷை புத்தகம் 24-வது பக்கத்தில் மறுத்தபடி இவரது மதத்தில் உயிர் பரிபூரணமாகலின் சிவனிருக்க விடமில்லாமற்போய், அதுகாரணமாகக் கடவுளில்லையென்று சொல்வதற்கிடமாய் இவரதுமதம் நாஸ்திகமதமாம்,

(4) ஷை புத்தகம் 50, 51, 52-வது பக்கம் வரையில் மறுத்தபடி, ஒன்று பலவா னால் ஒன்று கெட்டே பலவாக வேண்டுமெனச் சோமசுந்தர நாயகர் சொன்னபோது அங்ஙன மாயின், திருவிளையாடற் புராணத்திற் கூறிய வாறு, சிவன் பன்றியாங் கால் சிவன் கெட்டுத்தானே பன்றியாக வேண்டு மெனவும், பன்றி காரியமானதாலும் காரியம் அழிதல் மாலையதாதலாலும் பன்றி அன்றே யில்லாமற் போயிற்றா தலாலும் காரியமான பன்றி யில்லாமற் போயிற்றெனவும் சொல்லி, அது காரணமா கக் கடவுளில்லையென்று தீர்மானித்திருப்பதால் அது காரணமாகவும் இவரது மதம் நாஸ்திக மதமாம்.

(5) ஷை புத்தகம் 82வது முதல் 86வது வரையில் கண்டித்தவண்ணம் நீர் ஸ்தானத்தில் உயிரையும் கடல் ஸ்தானத்தில் சிவனையுஞ் சொல்வதால் நீரையின்றிக் கடலென்னுஞ் சொற்குப் பொருளில்லாமைபோல வுயிரையின்றிக் கடலென்னும் சொற்குப் பொருள் இல்லாமற் போகின்றது. அதுகாரணமாகவும் இவரது மதம் நாஸ்திக மதமாம்.

(6) "பதிபசுபாச வாத” த்தில் 34ம் பக்கத்தில் பழத்திற் சுவைவியாபித்த வுவமானப்படியும் இவரது மதம் நாஸ்திக மதமாம்.

(7) ஷை புத்தகம் 37ம் 38ம் பக்கத்தில் பாலில் நெய் வியாபித்த வுபமானத்தில் மறுத்தவாறும் இவரது மதம் நாஸ்திக மதமாம்.

(8) ஷை புத்தகம் 44, 45, 46ம் பக்கங்களில் சூரியன், ஒளியில் வியாபித்த வுபமானத்தில் கண்டித்தபடியும் இவரது மதம் நாஸ்திக மதமாம்.

(9) சபாபதி நாவலர் சிவம் அளவைகளான் அறியப்படல் வேண்டுமெனக் கூறியதை வேதாந்த சங்கை நிவாரணம் 42 முதல் 50வது பக்கவரையில் கண்டித்தபடி எது அளவைகளான் அறியப்படுமோ, அது சடமாயும் அசத்தாயும்

போமாகலின், அது பற்றியும் அவரது மதம் நாஸ்திக மதமாய் அவரைச் சார்ந்த இவரும் நாஸ்திகராய் அது காரணமாக இவரது மதமும் நாஸ்திக மதமாம்.

**(10)** இவர் பதி பசு பாசங்கள் தனித்தனிச் சத்துப்பொருள் எனக் கூறுகின்ற மையின் அது பற்றி யிவரது பதி, மூன்றி லொரு பங்கு இடத்தைப் பெற்று, அது கீரணமாக இந்த மதம் மூன்றி லொருபங்கு ஆஸ்திகமும், இரண்டுபங்கு நாஸ்திக முமாய் இருக்கின்றமையின், அது பற்றியும் இவரது மதம் நாஸ்திக மதமாமென்க. (இவ்விஷயம் வேதாந்த சங்கை நிவாரணத்தின் கடைசியில் "அஸ்திக நாஸ்திகம்" என்னும் விஷயத்தில் தெளிவாய் விளக்கப்பட்டிருக்கின்றது.)